உ

சிவமயம்.



தஞ்சாவூர் ஜில்லா திருக்களருக்குச் சமீபமுள்ள

நல்லூர்

# ஸ்ரீ சௌந்தரியநாயகியம்மன் சமேத கைலாசநாத சுவாமி ஆலயத்தின்

# கும்பாபிஷேக வரலாறும்

 துதிகளும். 


ஆக்கியோன்
கோவிலூர் மகா. கோவிந்தசுவாமி



தஞ்சாவூர் வெற்றிவேல் பிரஸ்.
1959.

24-3

# முன்னுரை.

ஸ்ரீமத் அகண்டேகரச சச்சிதானந்த சொரூபமாயும், சகல பிரம்மாண்ட கோடிகட்கும் ஆதாரமாயும், காரணமாயும், விளங்கும் பரம்பொருளே பந்தத்தில் கட்டுப்பட்டுழலும் சீவர்களை சதுர்வித புருஷார்த்தங்களையுங் கொடுத்து உய்விக்கும் பொருட்டு கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பல ஸ்தலங்களுள் புண்ணிய நதிகளிற் சிறந்த பொன்னி நதியென்னும் காவிரிநதியாற் சூழப்பெற்ற சிறப்புமிக்க சோழவளநாட்டிலுள்ள திருக்களர் என்னும் திவ்வியஸ்தலத்திற்குச் சுமார் இரண்டு மைல் தூரத்திற்கு மேற்கில் அமைந்துள்ள நல்லூர் என்னும் கிராமத்தில் பூர்வகாலம் முதற்கொண்டு ஸ்ரீ செளந்தரியநாயகியம்மை சமேதராய்க் கோயில் கொண்டிலங்கும் கைலாசநாத சுவாமி கோயில் மிகவும் ஜீரணமடைந்திருந்ததை மேற்படி திருக்களர் மடாலயத்தின் தலைவரும் மேற்படி நல்லூர் ஆலயத்தின் தர்மபரிபாலகரும் ஆகிய ஸ்ரீ கிருஷ்ணனந்த சுவாமிகள் திருப்பணி செய்து ஸ்ரீ சிருங்ககிரி சாரதாபீடம் ஜகத்குரு ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த சங்கராச்சார்ய சுவாமிகள் அவர்கள் மேற்படி ஆலயத்திற்கு நேரில் வந்து பார்வையிட்டு அனுக்கிரகித்ததை முன்னிட்டு விகாரி ஆண்டு ஆனித்திங்கள் 32-ம் நாள் (16—7—59) குருவாரமும் ஏகாதசி திதியும் அனுஷ நக்ஷத்திரமும் கூடிய சுபதினத்தில் உதயாதி 10 நாழிகைக்கு மேல் $13\frac{3}{4}$ நாழிகைக்குள் (10 மணிக்குமேல் $11\frac{1}{2}$ மணிக்குள்) கன்னிகா லக்கினத்தில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெறச் செய்தார்கள்.

அதன் நினைவுமலராக மேற்படி ஆலயத்தின் படங்களுடன் கும்பாபிஷேக வரலாறும், துதிகளும் சுருக்கமான முறையில் அமைத்த இவ் வெளியீடு மண்டலாபிஷேகத்தன்று வழங்கப் பெறும்.

கோவிலூர்
27—8—59

இங்ஙனம்,
மகா. கோவிந்தசுவாமி.



நல்லூர் ஆலயத்தின் முன் தோற்றம்



நல்லூர் ஆலயத்தின் பின்தோற்றம்.



நல்லூர் ஆலயத்தின் உள் தோற்றம்

உ

# நல்லூர் ஸ்ரீ செளந்தரிய நாயகியம்மை சமேத கைலாசநாத சுவாமி ஆலயத்தின்

# ★ கும்பாபிஷேக வரலாறு. ★



இருபத்தெண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர்கொண்ட பொன்னிவள மோங்குசோ ணாட்டுறு
திருக்கள ரெனுந்த லத்தின்
திசைமேல்பு றத்திலுறு நல்லூரி லேமுன ந்
திகழ்சவு ந் தரியாம் பையாம்
தேவியுமை சகிதராங் கைலாச நாதனார்
திருவால யங்கண் மதில்கள்
சினகரமுன் மண்டபம தாதிபணி யாற்றிஸ்ரீ
சிருங்ககிரி லோக குருவாம்
பேர்கொண்ட சங்கரா சாரியர்வந் தருளவே
பெறுகலியி னுகம தனிலே
பேணுமை யாயிரத் தறுபதா மாண்டினில்
பேசுறு விகாரி வருடம்

பிறங்குறுவ தாமானி முப்பத்தி ரண்டினில்
பிரியகுரு வார மதனில்
பிறைமிகும் பூர்வயே காதசியி லனுடமாம்
பெருமைநட் சத்தி ரத்தே
பார்கொண்ட சுபயோக கன்னிகா லக்கினம்
பரவுசுப வேளை தனிலே
பண்ணவுறு சகலவித மாகுமுப சாரமும்
பற்றுகும் பாபி டேகம்
பரமசிவ இறையாதி நிகிலதெய் வங்களும்
பாகமார்ந் தருள்பு ரியவே
பன்னுமுல கத்தவர்க ளாசிபல கூறவே
பாங்குறச் செய்து உவந்தான்
தேர்கொண்ட திருவீதி தீர்த்தமுத லார்மிகு
திருக்கள ரெனுந்த லத்தில்
தேசுமிகு மாலயம தார்ந்தருள் புரிந்திடுந்
தேவவீ ரேச முனியின்
திருமடா லயமதனின் தலைமையுறு நிலைமையன்
தேர்ந்தவே தாந்த போதன்
திவ்யகிருஷ் ஞனந்த சுவாமியெனு நாமனுஞ்
சேமமார் நாவ லோனே.

---

## நல்லூர்

## ஸ்ரீ கற்பக விநாயகர் துதி.

சீர்வளர் கரும மதனினும் ஞானம்
சிறந்ததென் றுலகின ரறிய
பார்வளர் உலகை வலம்வரா தனைத்தாம்
பரசிவ னென்னுஞா னத்தால்
கார்வளர் சிவனை வலம் வரல் புரிந்து
கனியுறும் முதல்வனும் நல்லூர்
தார்வளர் தலமார் கற்பக மென்னும்
கணபதி தனைத்தினம் பணிவாம்.

## ஸ்ரீ சிங்காரவேலவர் துதி.

நிலவணி யிறைவன் வினவிட வன்று
நிகரிலாப் பிரணவப் பொருளை
குலவிட வருளி யருண்மிகு குமர
குருபர னுயுறு மமரர்
பலமிகுஞ் சேனைத் தலைவனுய்த் திகழ்ந்து
பரிந்துநல் லூர்த்தலந் தனிலே
நிலவுசிங் கார வேலவர் பதத்தை
நிதம்பணிந் திடரொழித் திடுவாம்.

## ஸ்ரீ கைலாசநாதர் துதி.

நீர்மிகு கங்கை மதிமுடி யணிந்து
நியமமார் சனகனு தியர்க்கு
சேர்மிகு சீவ பரமெனு மிரண்டுந்
தேர்ந்திடி னேகமீ தறிந்தால்



ஆர்மிகு பந்தஞ் சமுசயங் கருமம்
அறுமெனும் ஞானமுத் திரையார்
நேர்மிகு நல்லூர் அமர்ந்தகை லாய
நிமலநா தனைத்தினம் பணிவாம்.

## ஸ்ரீ சௌந்தரிய நாயகி துதி.

பொன்னில முதலாம் செல்வமோ டரிதாய்ப்
புகலருட் செல்வமு மனிசம்
மன்னுமன் புடையோர் அடைந்திட வருளும்
மாண்புறு கருணைமா கடலாய்
துன்னுநல் லூரின் திருத்தல மதனில்
துதைந்தநற் சோதியாய் விளங்கும்
அன்னைசௌந் தரிய நாயகி தன்னை
அனுதினம் பணிந்தருள் பெறுவாம்.

## ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் துதி.

நீருறு வளநல் லூர்த்தலந் தனிலே
நேர்ந்தருள் கற்பகக் களிற்றை
பேருறு மிகுசிங் காரவே லவனைப்
பேணுகை லாயநா யகனை
தாருறு மனைசௌந் தரியநா யகியைச்
சாரிவர் தளிசெய வருளும்
சீருறு முனிவன் திருக்களர் வீர
தேசிகன் தனைத்தினம் பணிவாம்.



